# டாக்டர் எங்கே?

அண்ணாதுரை

டாக்டர் எங்கே? டென்னிஸ் ஆடுகிறார்!

டாக்டர் எங்கே? ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறார்.

இப்போது எங்கே டாக்டர்? தெரியாதமாரிதரி கேட்கிறீரே, காலையிலே என்ன வேலை? கல்விக்கமிட்டி கூடுகிறதா? இல்லை சார் சின்னக் காஞ்சிபுரம் கிளை வைத்திய சாலைக்கப் போயிருக்கிறார், வர சற்றுநேரமாகும்.

நமது ஊ.ர், டாக்டர் சீனுவாசன் அவர்களைப் பற்றி நீங்கள் யார் விசாரித்தாலும் மேலே உள்ள வகையான பதில்தான் கிடைக்கும்.

என்க்கொன்றம் நோய் இல்லை அவரைத்தேட! நான் அவரைக் கூப்பிட விருப்புவது ஊராருக்காகத்தான்! அவர் பிறந்தது புதுக்கோட்டை, இருப்பது இங்கு; இருப்பது என்றால், உங்கள்ப் போல சும்மா இல்லை! இந்த ஊர் சேர்மனாக இருக்கிறார். இந்த ஊர் வட்டாரத்து எம்.எல்.ஏ. வாக இருக்கிறார். இந்த ஊர் காங்கிரசின் தலைவராக இருக்கிறார்! அது மட்டுமில்லை. இந்த ஊருக்குப் பாதுகாப்புச் சங்கம் இருக்கிறதே (இரக்கிதென்பதை இப்போதாவது தெரிந்துகொள்ளுங்கள்) அதற்கும் அவரே தலைவர்! நான், அந்த விஷயமாகத்தான் அவரைக் காண விரும்புகிறேன்!

காஞ்சிபுரத்திலே சங்கு ஊதப்பட்டது பருட்சார்த்தமாக! முதல் தடவைச் சரியாகக் காதிலே விழவில்லை! காஞ்சிபுரத்திலே (ஏ.ஆர்.பி) வார்டர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஏ.ஆர்.பி. வார்டர்களுக்குப் பயிற்சி முடியவில்லை! காங்சிபுரத்திலே தீயணைக்கும் மோட்டார்கள் தேவை என்று ஏ.ஆர்.பி அதிகாரி வற்வுறுத்திக் கூறியிருக்கிறார்.

ஆனால் தீயணைக்கும் புதிய மோட்டார்கள் காஙசிபுரத்திற்கு இன்னம் வாரக்கானோம்! காஞ்சிபுரத்துக்கு, ஒரு ஊர்காப்புச்சங்கம் இருக்கிறது. ஊர் காப்புச்சங்கம் செய்யும் வேலை என்னவென்று தெரியக் காணோம்! அந்தச்

சங்கத்துக்கு ஒரு தலைவர் இருக்கிறார். இது விஷயமாக அந்தத் தலைவர் டாக்டர் சீனுவாசன், எங்கே என்ன செய்கிறார் என்பது தெரியவில்லை. விளக்கிருக்கிறது, ஒளியில்லை! பழமிருக்கிறது ருசியில்லை! மலரிருக்கிறது, மணமில்லை! என்றுரைப்பதுபோல், காஞ்சிபுரத்தில், இது விஷயமான நிலைமை இருக்கிறது!

ஆனால் காஞ்சிபுரம் யுத்தப் பிரதேசத்தின் பக்கப் பிரதேசம்! வானவீதி வழியாக விமானங்கள் சென்னையிலிருந்து இங்குவர 23 மைல்கள்தான் உள்ளன! மூன்று மாதங்கட்கு முன்பே, இங்கு, பதுங்குங்குழிகள் வெட்டிக்கொள்ளுங்கள் என்று சப் கலெக்டர் பிரசங்கம் செய்துவிட்டார். ஊர் காப்புச்சங்கம் ஒன்று ஏற்பாடாயிற்று. அதனை ஏற்காமல், டாக்டர் சீனுவாசன் அசர்கள் தாமே முன்னின்று புதிதாக ஓர் ஊர்காப்புச் சங்கம் துவக்கினால்.

இத்தகைய காஞ்சிபுரத்தில்தான் நான், ஊர் காப்புச் சங்கத்தின் தலைவர் எங்கே? என்ற உரத்த குரலிற் கூவவேண்டி இருக்கிறது! எங்கே ஏதாவது திட்டம் இருக்கிறதா? தெரிந்தவர்கள் கூறுங்கள் கேட்போம்!

காஞ்சிபுரத்தில் கடந்த சில வாரங்களாகவே, மாதங்களாகக் கூட, சென்னை மக்கள், வந்து சேருகின்றனர். ஒரு வாரமாக வருவோரின் தொகை அதிகரித்துவிட்டது. 6-ஆந் தேதிக்குப்பிறகு, விநாடிக்கொரு மோட்டார் வருகிறது, பதைத்துக்கொண்டு பல ஆயிரமக்கள், இங்கு வந்தபடி உள்ளனர்.

வார்சாபிலே, குண்டுமழையாம்! பொடிப் பொடியாகிவிட்டதாம் கட்டடங்கள்! சாட்டர்டாமீல் தூளாக்கி விட்டானாம்! லண்டன் தரை மட்டமாகிவிட்டதாம்! என்று காப்பி சாப்பிட்டுக்கொண்டே கவலையற்றும் களிப்போடும் கூறிக்கொண்டிருந்தவர்கள், சற்று அச்சத்தோடு, பினாங்கு போய்விட்டதாமே, கோலாலம்பூர் பிடிபட்டதாமே என்று பேசத் தொடங்கி, பின்னர் சிங்கப்பூரில் விமானங்கள் குண்டி வீசிப் பெருஞ்சேதமாம், ரங்கூனில் நிலை ளிச்சத்தின்போது குண்டுகள் போட்டானாம், ஏராளமான நஷ்டமாம் என்று ஏக்கத்தோடு கூறவேண்டி நேரிட்டதுடன், பொழும்புவில் 75-விமானங்கள் பறந்தனவாம், குண்டு வீச்சு 2 1/2 மணிநேரம் நடந்ததாம் என்று குமுறி, இன்று, விசாகப்பட்டினத்திலும் காகிநாடாவிலும் எதிரியின் விமானங்கள் குண்டு வீசினவாம் என்று விசாரத்துடன் கூறி, சென்னையில் விடியற்காலை 4.30 க்கு

விமானப்படையெடுப்பு அபாயச்சங்கு ஊதப்பட்டு, 6,05க்குத்தான், தெரிந்ததாம், என்று திகிலோடு பேசிக்கொண்டும், தெருவிக்கு வந்ததும், தம்மையுமறியாமல் வானத்தை நோக்குவதும், எந்தச் சத்தம் கேட்டாலும், பிமான சத்தமோ என்ற சஞ்சலத்தோடு கலந்த சந்தேகப்படுவதும், விளையாட்டுப் பிள்ளைகள் ஊதுகுழல் சத்தத்திலிருந்து வீட்டுக்கதவு சாத்தப்படும சத்தம்வரை, எந்தச் சத்தம் கேட்டாலும் திகில் படுவதுமாக இருக்கும் நிலை ஏற்பட்டுவிட்டது.

வீட்டுக்கு வெளியே இருந்தால் குண்டு தலைமீது விபம் என்று பயம். வீட்டுக்குள்ளே இருந்தால், கட்டடம் இடிந்து தலைமீது சாயுமே என்று அச்சம். என்ன செய்வது? எங்கே செல்வது? எப்படித் தப்பிப்பிழைப்பது? என்று மக்கள் தத்தளிக்கின்றனர். இத்தகைய தத்தளிப்பின் காரணமாக, ஒரு சிலர் தாறுமாறான கருததுக்களையும் வளர்த்துக்கொள்கின்றனர். ஒரு சிலர் தாறுமாறாகவும் பேசுகின்றனர். பலர் தலைகுனிந்தவண்ணம் இருக்கின்றனர். யாருக்கு எந்த விநாடியில் எத்தகைய ஆபத்து நேரிடுமோ என்ற அச்சம், மக்களைப்பிடித்து, ஆட்டிவைக்கிறது.

முகத்திலே சோகம் குடிகொண்டுவிட்டது. ஊர்களிலே இருட்டு வாசஞ்செய்கிறது. பயங்கரமான எண்ணங்கள் உண்டாகி மக்கள் மருட்டப்படுகின்றனர். எந்த விநாடியிலும், எந்த இடத்திலும், இதைப்பற்றியே நினைப்பு, இதைப்பற்றியே பேச்சு! யார் யாரைக்கண்டாலும் முதலில் கேட்பது, என்ன விஷயம் பேப்பரில்! நாகப்பட்டினத்லே என்னமோ நடந்ததாமே வாஸ்தவந்தானா?

காரைக்காலிலே குண்டு வீனானாமே, நிஜமாகவா? என்று குண்டு வீச்சு விஷயத்தைப் பற்றித்தான். அதற்குப் பிறகு, காலம் இப்படிக்கெட்டுவிட்டது பர்த்தீர்களா? என்று பேசுவதும், என்ன நடக்குமோ யார் கண்டார்கள் என்று சொல்வதுமாக மக்கள் மனங்குழம்பிப் போயிருக்கிறார்கள். இந்தக் குழப்பம், குண்டு விசாகப்பட்டினத்திலும், காகிநாடாவிலும் சீப்பட்டது என்ற செய்தி தெரிந்ததிலிருந்து அதிகரித்துவிட்டது. இந்தியாவுக்கு ஒன்றும் வராது! எதிரி இங்கே வரமாட்டான்.

அவனுக்கு நம்மிடம் என்ன விரோதம்? வெள்ளைக்கானிடந்தான் அவனுக்கிருக்கும் சண்டை என்று கூறிவந்ததை இப்போது

பெரும்பாலானவர்கள் மறந்துவிட்டனர். தவறான எண்ணங் கொண்டிருந்ததற்காக வருந்தியும் வருகிறார்கள். சிலர் இருக்கிறார்கள், சில்லுண்டிக் குணத்தில் முதல் பரிசுக்காரர்கள், அவர்களக்கு என்றைக்கும் தெளிவு ஏற்படாது.

பன்னாடை, அழுக்கைமட்டுமே நிறுத்திக்கொள்வதுபோல், பருந்துக்கு, செத்த எலி, வளையில் நுழையும் நண்டு ஆகியவற்றின் மீதே கண்ணோட்டமேற்படுவதுபோல், இவர்களுக்கு, விஷமத்தனத்தை மட்டுமே வளர்க்கத் தெரியும்! அந்த மனிதப் பன்னாடைகள் தவிர மற்றையோர், இன்றைய பயங்கரமான நிலைமைபற்றி உள்ளபடிக் கலங்குகிறார்கள்.

இந்தக் கலக்கத்தைப்போக்கும் கடமை, பீதியை அடக்கும் பணி, ஊர்க்காப்புச் சங்கத்தைச் சார்ந்தது என்பத நான், அந்த சங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். சென்னையிலிருந்து, காஞ்சிபுரத்தை வந்தடைந்துள்ள மக்கள், தங்கும் இடம், அவர்களின் சாதாரண தேவைகளுக்கு மார்க்கம் தேடித்தர வேண்டியதும, அவர்களை விசாரித்து விசாரத்தைப் போக்கி, உபசரித்துத் தேறுதல்கூறி, ஊரில் குடியேற விரும்பனில், உபகாரம் செய்யவேண்டியதும் ஊர்காப்புச் சங்கத்தின் வேலை.

மூட்டையும் முடிச்சுமாக ஓடிவருவதைப் பாருங்கள் என்று அவர்கள், மோட்டாரிலே, வண்டியிலோ, வருகிறபோது தெருத்திண்ணையில் உட்கார்ந்துகொண்டு பார்ப்பதும், பேசுவதுமாக ஊர் காப்புச்சங்க மெம்பர்கள் உள்ளனர்! அவர்கள் மீது தப்பில்லை. அவர்களுக்கு இன்னின்ன காரியத்தைச் செய்யவேண்டும் என்று ஊர்க்காப்புச் சங்கத் தலைவர், உரைக்கவேண்டும், செய்துகாட்டவேண்டும, பழக்கத்தை ஏற்படுத்தியிருக்கவேண்டும். காகிதச்சங்கம் கதைக்கு உதவாது! தமது பெயருடன் ஓர்விருது என்று போட்டுகொள்வதற்கு மட்டுமே, ஊர் காப்புச்சங்கம் இருக்கிறதென்று டாட்ர் என்னமாட்டார் என்று இன்னமும நம்புகிறேன்.

டாக்டர் கிடைக்கவில்லை என்பதற்காக நோயை வளர்த்துக்கொள்ளலாமா! டாக்டர் சீனுவாசன் அவர்களிடம் ஊர்பாதுகாப்பு இருக்கிறது என்றெண்ணிக்கொண்டு, சும்மா இருப்பது நல்லதாகாது!

சென்னையில், ஏதேனும் விபரீதம் ஏற்பட்டால், காஞ்சிபுரத்துக்கு இன்னமும பல ஆயிரமக்கள் வருவர். மனக்குழப்பமும் திகிலும் பன்மடங்கு அதிகரிக்கும். அதைச் சமாளிக்க, காங்சிபுரவாசிகள் பக்குவமாக வேண்டும்.

எனக்குத் தெரியும், மதம், வேதாந்தம், முதலிய எதுவும், இத்தகைய நெருக்கடியான நேரத்தில், பருட்சிக்கப்பட்டால் தோற்றுப்போகுமென்று, உங்களிடம் சொன்னால், நீங்கள் வீணாகக் கோபித்துக் கொள்வீகள் விஷயத்தை அலசிப்பார்க்க மாட்டீர்கள்! அந்த வழக்கத்தைத்தான் நம்மவர்கள் கைவிட்டு நெடுநாள்களாகி விட்டனவே!

குண்டுவீச்சு ஏற்படாதவரை, விபத்து ஏற்படாதவரையில், நாம் யாருக்கு என்ன கெடுதிசெய்தோம். நமக்கேன் கஷ்டம் வருகிறது? அவன் ஒருவன் இல்லையா மேலே! என்று பேசுவார்கள். விழுந்தால் அட ஆண்டவனே! உன் கோயிலிலே இடிவிழ. ஏண்டா இப்படிப் பாடுபடுத்துகிறாய். நான் என்ன செய்தேன் இந்தத் தண்டனையை அனபவிக்க என்ற ஓலமிடுவார்க்ள.

இது சகஜம். ஆகவே, இத்தகைய யோசனைகளை விட்டு விடடு, ஆபத்து வந்தாலும், என்ன நேரிட்டாலும், கலங்கக்கூடாது என்று மனத்தில் திடம் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். நெஞ்சங்க குமுறுவதை அடக்காவிட்டால், கோழைத்தனம் வளர்ந்துவிடும. கோழைகளை மிரட்ட குண்டுகூடத் தேவையில்லை! நிழலைக் கண்டாலும் மிரளுவர்.

நமது மக்களின் செவிகள், நல்ல கானம், இனிய வாத்தியம், சுவையுள்ள பேச்சு, மழலை, ஊடல் உரை ஆகியவைகளையும், சிற்சில சமயங்களில், தப்புதண்டாக்காரரின் கூக்குரலையும், சதாகாலமும் கோயில் வெடிச் சத்தங்களையுமட்டுமே கேட்டுப் பழக்கப்பட்டவை! சண்டை! சண்டை! என்று பத்திரிகைகளில் படித்துக கேட்டவர்களே தவிர, எதிரிப்படைகளின் எக்காளம்.

ஆயுதங்களின் ஆர்ப்பரிப்பு, குண்டுவீச்சுச் சத்தம், அதனால் கட்டடங்கள் சரியும் சத்தம். அதனடியிற் சிக்குண்டோர் கூயும் கோரமான சத்தம், விமானப்போர் சத்தம், ரீங்கி வேட்டுச்சத்தம், டாங்கியை டாங்கி மோதும்போது எழும் சத்தம், ஆகியவைகளைக் கேட்டுப் பழக்கமில்லாத செவிகள் படைத்தவர்கள் நமது

மக்கள்! ஆனால் எத்தனை காலத்துக்குச் செவிக்கு ருசிமட்டமூ கிடைத்துக் கொண்டிருக்கும்!!

எந்த வெள்ளைக்காரரைக் கண்டிக்கும் வெட்டி வேலையை நாம் கற்றுக்கொண்டோமோ, அந்த வெள்ளைக்காரன் இந்த நாட்டில் இருந்து வந்ததால், இன்று நாம்படும் பதைப்பு, பயம், திகில், கடந்த 150 ஆண்டுகளாக நமக்கு இல்லமலிருந்து, பிரிட்டன் கடலரிசியாக இருக்குங்காரணத்தால், நமது நாட்டுக் கடலோரங்கள் காப்பாற்றப்பட்டு வந்தன. இப்போது, பிரிட்டன் சங்கடத்துககள்ளானதால், பிரிட்டனுக்கு ஏற்பட்டிருப்பதைவிடக் கொடிய கவலை, இங்கு நமக்கு உண்டாகிவிட்டது.

பாருங்கள் கூர்ந்து, அதோவரும் மக்களை! சொன்னையிலே இன்னமும் ஒன்றும் நேரிட்டுவிடவில்லை! எனினும், அவர்களின் முகத்தைப் பாருங்கள், எவ்வளவு திகில்! கைகால் நடுங்குவதைக் காணுங்கள்! உயிர் தப்பினால்போதும் என்ற பதைககிறார்களே, அந்தப் பரிதாபத்தை நோக்குங்கள்! இதற்குள் இங்கு இவ்வளவு இருக்கிறதே, லண்டன் இரண்டாண்டுகளக்கு மேலாக ஜெர்மன் குண்டுவீச்சுக்காளாகி வருகிறதே அது போன்ற கொடுமை நேரிட்டால், எத்தனை நிமிடம் நமதுநாடு நிலைத்திருக்கும் என்பதை நினைத்துப்பாருங்கள்.

பிரிட்டிஷாரின் விமானபலம், கடற்பலம், தரைப்படை ஆகியவற்றைப்பற்றி ஏளனம் செய்யும் ஏமாளிகளே! பிரிட்டிஷ் படைகள் சாமர்த்தியமாகப் பின்வாங்கின என்று படித்துவிட்டுக கேலி செய்யும் குறும்பர்களே! பிரதேசங்கள் பிரிட்டிஷ் பிடியிலிருந்து போனதெனப் படித்ததும், போச்சா! போய்விட்டதா! என்று கைகொட்டும கபோதிகளே!

உலலேயே பெரிய சாம்ராஜ்யமாயும், ஒரு நூற்றாண்டுக்கு மேலாகவே தனது வல்லமையைப் பிறநாடுகள் மதித்து வரும்படியும் செய்து வாழ்ந்துவரும் ஒரு பிரிட்டனுக்கே இன்று படைபலம் சரியாக இல்லை என்று கூறவேண்டியும், எதிரியிடம் தோற்கிறது என்று சொல்லவேண்டியும் இருக்கிறதென்றால், ஓட்டைத் துப்பாக்கிக்கும் ஒடிந்துபோன பீரங்கிக்கும் பிளாசிலியே தோற்ற நாட்டவரான நாம், புராணப்புளுகர் கூறும் அஸ்திரங்கள் தவிர வேறொன்றறியோம் பராபரமே என்றிருக்கம் நாம், படையைக்கண்டாலே

பதைக்கும் நாம், உயரமான சீக்கியன், பாலட்டியான பஞ்சாபி, பட்டாளத்துத்துரை ஆகியோரைக் கண்டாலே, கதவைத்தாளிடும் நாம், தனியே இன்றோ, நாளையோ, நேற்றோ, இருப்பின், பிரிட்டிஷாரையே திணறடிக்கும் ஜப்பானோ, ஜெர்மனியோ, நம்மை, எவ்வளவு, எளிதிலே நமதுநாட்டை அடித்துத் தள்ளிவிட்டிருக்குமென்பதை எண்ணிப் பாருங்கள்! அம்மியும் குருவியும் ஆகாயத்திலே பறக்கும்போது, அடியேன் கதி என்னாகும் என்ற எச்சில் இலை கூவாது, ஆனால் அறிவுள்ளவர்கள் அதனை அறிந்துகொள்ளவேண்டும.

குண்டுகள் சரியாக விழதமுன்பே கடலோரத்தில் மட்டுமல்ல. கிராமங்களில்கூட, பதைபதைப்பு உண்டாகம் இந்நாட்டுக்காரராகிய நாம் பிரிட்டனின் சங்கடம் பற்றியோ அதன்படை பலக்குறைவு பற்றியோ கேலிசெய்வது வெறுங்கோமாளித்தனமாகும்.

இத்தகைய குறும்புகளை விட்டுவிடுங்கள் என்ற இவைகளையும், இவை போன்றவைகளையும் எடுத்துரைக்கவும், புதிதாக வருவோரை ஆதரிக்கவும், ஊர்க்காப்புச் சங்கம் வேலைசெய்யவேண்டும்! ஒவ்வோர் ஊரிலும் உள்ளன இத்தகைய சங்கங்கள்! நமது ஊர்ச்சங்கம் என்ன செய்தது என்று அந்தந்த ஊர்மக்களும் விசாரிக்கவேண்டும. எங்கள் ஊரில் என்ன நடக்கிறது என்று கேட்காதீர்கள்! வெளியே சொன்னால் வெட்கக்கேடு! நான்தான் கேட்சிறேனே, எங்கே டாக்டர்?